# வேணு கானம்

-----------------------------------

ஆறாத காயங்களான துளைகளில்-உன் அழகு விரல்கள்
நர்த்தனம் புரிந்திட, தித்திக்கும் திருப்பவளச் செவ்வாயிதழ்களின்
ஓயாத தெய்வீக முத்தம் உயிர்க் காற்றாய் என்னுள் உலா வந்திட
வறியவனாய் வாடிக்கிடந்த என்னில்-பரந்தாமனே,
வரமாய் உள்ளத்தை மயக்கும் உன் தேவகானம்





வெற்றுப் புல்லிலும் உன்னால் தேவராக பிறக்க
வெறுமைக்குள் உன் உயிர்காற்று நடனம் ஆடிட
ஆனந்த ராகத்தில் வாழ்வு ஆலாபனமாய் மாறிட
ஏழை உள்ளத்திலோ பக்திப் பரவசம்.

உன் தொடுகையால் ஆறிய காயங்கள்
ஓயாத உன் செவ்விதழ் முத்தம் பருகி
போதையில் பாடிடும் தேவகானங்கள்

இருப்பாய், அறியாப் பரம்பொருளாய்
சூனியமாய் உன் காட்சி, பூச்சியத்திற்குள் உன் ஆட்சி
கணந்தோறும் வாழும் வாழ்க்கையில் வியந்து மகிழ,
விழிநீர் பூத்து நெகிழ எங்கும் உன் ஆனந்தப் பிரசன்னம்



எங்கும் நீயே! எல்லாம் நீயே!
இருப்பும் நீயே, இருப்பதும் நீயே,
உடைந்து நொருங்கிய உள்ளத்தால்
உன்னை வணங்குகின்றேன்.



துணையைத் தேடும் குயிலும், தாயைத் தேடும் கன்றுமாய
உன்னை அழைக்கும் என்குரலில் கடலைத் தேடும்
நதியின் பரவசங்கள், மொட்டவிழும் மலராய்
உள்ளம் விரிய தொட்டு மலர வைக்கும் காலைக்கதிராய் நீ
கண் மலர்ந்து காலைப் பனியில் முகம் துடைத்து
தாயை கண்ட சேயாய் மலரும் குழந்தையாய் நான்

ஓ தெய்வீக பாடகனே!, எங்கும் உன் பிரபஞ்சகானமே
குயிலின் கானத்திலும், மயிலின் நடனத்திலும்
கன்றின் குரலிலும், காற்றின் அசைவிலும்
இடியின் ஓசையிலும், மின்னலின் ஒளியிலும்
மழைத்துளியிலும் உன் ஓங்கார நாதமே
வியந்து மகிழ, இரசிகனாய் என்னை மாற்றினாய்



சத்தியமே, சத்தியத்தில் உன்னைக் காண
உண்மையில் உன்னைத் தொழுதிட
உண்மையை வாழ்வாக்கி வாழ வரம் கொடு

பிரபஞ்ச பிரக்ஞையே, மதம் கடந்த
ஆன்மீக ஒளியில் என்னை வழி நடத்து
அகங்காரம் அழிந்த தூய உள்ளத்தோடு
உன்னை அன்பு செய்திட அருள்தா



நீயே நானகி, அஹம் பிரம்ம அஸ்மி
சத்சித்ஆனந்தப் பெருநிலையில்
“நான்” மறைந்திட கருணை செய்



உன்னை மறந்தபோது இறந்துபோகின்றேன்
உன்னை நினைக்கும்போது மலர்ந்து மணக்கின்றேன்
எங்கும் நீயே -எல்லாம் நீயே

“நான்” தோன்றும் போது நீ மறைகின்றாய்
“நான்” மறையும் போது நீ தோன்றுகின்றாய்
என்னே உன் கருணை

வண்ணமலர் என் வாழ்வு ஒரு பகற்பொழுது
வாடி உதிரமுன் இறையே என்னைச் சூடிக்கொள்
வண்ணமும், வாசமும், காதலும் வற்றமுன்
என்னை ஏற்றுக்கொள், நீ சூடவே நான் மலர்ந்தேன்
உன் திருவடியே என் சொர்க்கம்.



என் பாடலிலோ தாளமில்லை சுரமில்லை
என் கர்வம் அழிந்து கண்ணீர் வழிந்திட
உடைந்த என் உள்ளம் உன்னைத் தேடுகின்றது



உன் அன்பிற்காய் உருகிப்புலம்பி அழுதிட
வெற்றுப் புல்லாங் குழல்
வேனுகானத்திற்காய் தவமிருக்கின்றது,
உயிர் மூச்சே உள்ளே வருவாயா?

பதவியும், புகழும், பணமும் தந்த போலி அகங்காரம்
மூச்சை முட்ட, நாறி மணக்க நம்மைப் பிரிக்க
வாழ்விலே துயரம், பொன்மானைத் தேடிய வாழ்வோ
அவலம், சுத்த சூனியமே,சைதன்யமே
உன்னில் கலந்து மகிழ என்னைச் சூனியமாக்கு

சுமை சுமந்து சோர்ந்தேன் நம்பிக்கையிழந்து நலிந்தேன்
சிலைகளை தொழுது சித்திரங்களை வணங்கி அழுத
அஞ்ஞானி நான், என் சுமைகள் குறையவில்லை
சோர்வு நீங்கவில்லை, கலக்கம் தீரவில்லை

என்னுள் உன்னைக் காணாமல்
எங்கும் தேடியலைந்த குருடன் நான்
என்னை அறிந்திட-நான் அழிந்திட
எங்கும் நீயே சத்சித் ஆனந்தமே.







வாழ்வும் வழிபாடும் வேறாக மனதில் வெறுமை
“உண்மையில்” உன்னைத் தொழுதிட
என் வாழ்வே உண்மையானது, நெஞ்சிலே பரவசம்
கடலைச் சேரும் நதியின் ஆனந்தத் தாண்டவம்

எளிமையின் அழகில், எல்லாம் துறந்த நிலையில்
உன்னைக் காண “நான்” என்னும் ஆணவம் மறைய
நீயே நானான ஆனந்தம்.

இறைவன் எங்கே? அவன் கோயில்களில் இல்லை
குருத்துவாரில், மசூதிகளில் இல்லை
ஆலயங்களில், விகாரைகளில் இல்லை
மந்திரங்களில், சடங்குகளில் இல்லை



தூப தீப மலர் அஞ்சலிகளும், ஆடம்பர விழாக்களும்
அவன் வேண்டாதவை, நொருங்கிய உள்ளமும், கருணையும்
அவன் விரும்பிட, இருப்பதை பகிர்ந்து அன்பை வளர்த்திட
அன்பேயுருவான இறையரசு நம்முள்ளே

ஊதாரிப் பிள்ளையாய் என் பயணம், உன்னை விட்டு ஓடி
உள்ள செல்வமெல்லாம் இழந்து மது, மாது, பொன், மண் என்னும்
பொய்களைத் தொலைத்து உண்மையே உன்னைக் கண்டேன்
இழந்தபின் கண்டேன் இழக்கமுடியாத ஒன்றை
இழப்பதெல்லாம் பொய்யே இவ்வுலகம் தந்த மாயையே
மெய்பொருள் நீ ஒன்றே

ஒரு இசைகலைஞன் நான், என் வீணையில் இசையில்லை
என் பாடலில் சுரமில்லை, இதயம் முழுதும் இருள்
ஏங்கியழுத விழிகளில் கங்கை
என் இறுக்கம் தளர்த்தி இருட்டை போக்க
கதவை திறந்தேன் ஒளியாய் நீ

என் வீணையில் சுருதி சேர
என் கானமும் தாளத்தோடு ஒலிக்க
நான் பாடும் பாடல் உனதே

மோகத் தளைகளில் சிக்கிக்கொள்ளாதபடி,
ஆசைச் சூறாவெளி என் இதயப் பூவனத்தை
அழித்துவிடாதபடி, பொன்னும், புகழும், பெண்ணும்
கடந்து நான் செல்ல என்னை வழி நடத்து



தோல்விகள் என்னைப் பக்குவப்படுத்திட
தொடரும் இழப்புகள் என்னை சிற்பமாய் செதுக்கிட
என்னே உன் கருணை.



அழியாத செல்வத்தை அகத்தில் காண
புறப்பார்வையை தோல்விகளால் குருடாக்கி
எனக்கு அகப்பார்வை தந்த
அப்பன் நீ, என்னை ஆட்கொண்ட தேவன் நீ

உனக்காக ஒரு பாடல் பாட எனக்கோர் ஆசை
ஆயினும் என் நெஞ்சிலே பெரும் தயக்கம்
உன் சந்நிதியில் ஆயிரமாயிரம் அற்புதக் கலைஞர்கள்
நானோ சாஸ்திரிய சங்கீதமறியாத பேதை

என் பாடலில் குழந்தையின்அழுகையுண்டு
குயிலின் ஏக்கமுண்டு
நீ இரசிப்பாய் என்ற நம்பிக்கையுண்டு
ஏனெனில் நீ மாபெரும் கலைஞன்
தாயின் உள்ளம் உனது, சேயின் பாடல் எனது.

உன் அழைப்பினை ஏற்று உன் விருந்துக்கு ஏழை
நானும் வந்தேன். உன்னிடம் இரப்பதற்கு
அதிலும் உன்னை மட்டும் இரப்பதற்கு
எனக்கு வரம் தந்த தெய்வம் நீ
உன் விருந்தில் நானோ அதிதி, நீயே என் விருந்து
என்னே என் பேரின்பம்.





உன்னைச் சரணடைந்தேன், நீயே
சச்சித் ஆனந்தம் என்றுணர்ந்தேன்
அம்மையப்பனாய் உன்னைக் கண்டபின்
என் அழுகையும் ஓய்ந்தது
என் செல்வமெல்லாம் தொலைந்திட
எல்லாம் நீயானாய் என்னே என் ஆனந்தம்.

விளையாட்டில் உன்னை மறந்திருந்தேன், இராப்பொழுதில்
பசியும் தூக்கமும் வாட்டுகையில் உன் ஞாபகம்
நீயோ விளக்கோடு தெருமுனையில் என்னைத் தேடி வந்தாய்
நான் வரும் பாதையில் ஒளிபடர
விருந்தோடு எனக்காய் விழித்திருந்தாய்.
அப்பா உன் ஊதாரிமைந்தன் ஓடோடி வருகின்றேன்.



ஏனிந்த மௌனம் உன் வீணை உறங்கி கிடக்க
என் இதழ்கள் விம்மித்துடிக்க ஏன் பேசமறுக்கின்றாய்?
ஓ இது நீயல்ல நான், உன் பாடல் என்னைத் தேடியழைக்க
உன் கானம் இதயத்தை சூழ்ந்து நிறைக்க
உன்னோடு என் பாடல்.
என் மௌனம் கலைய, சத்தங்கள் ஓய.
உன் இரசிகனாய் நான், என் இரசிகனாய் நீ.

உன் பூவனத்தில் ஆயிரம் அழகுமலர்கள்
என் மலருக்கோ வண்ணமில்லை, வாசமில்லை
விழிநீர் மலர்களோடு-உன் வாயில் வந்தேன்
உன்னையே நீ எனக்குத் தந்தாய், என்னே என் ஆனந்தம்.
நீ சூட விரும்புவது -என் நெர்ரங்கிய உள்ளம்தானா?



நான் தூங்கிக் கிடந்தேன் என் பயணம் மறந்து
படகில் சோம்பிக் கிடந்தேன், என் பூமாலை வாடிப்போயிட
என் புல்லாங்குழல் ஓய்ந்து கிடந்திட தூங்கிக் கிடந்தேன்
என்னுள்ளே இருள்

ஆற்றில் வெள்ளம் ஓடிட அலைகள் பெருகிட
வெறித்த பார்வையோடு சூனியத்தில் நிலைத்த என் விழிகள்.
காலம் பல போயிட பயணமும் தள்ளிப்போயிட
மறுகரையிலிருந்து குயிலின் அழைப்பு
என்னுள்ளே புதுவிழிப்பு



கோயில்கள், விகாரைகள், மசூதிகள் திறந்திருக்க
ஏனோ நீ. அவற்றைக் கடந்துபோகின்றாய்,
உன்னை ஏற்காத  இடங்களைத் தாண்டிப்போகின்றாய்.
சேரிகளையும்,ஏழை, எளியோர் குடில்களையும்
நொருங்குண்ட இதயங்களையும் நாடிப்போகின்றாய்

எளியவனே ஏழை என் குடிலுக்கோ கதவில்லை
காவலுக்கும் நாயில்லை
விருந்தோடு நான் காத்திருப்பேன்
மறந்தும் கடந்து போகாதே என் மனம் வாடும்

தூக்கம் துறந்த விழிகள், துயில் மறந்து விழித்திருக்க
தூங்கவிடாத உன் நினைவு என் நெஞ்சை நிறைத்திருக்க
காதலே நீ வரும் வழி பார்த்து
வழிமேல் விழி வைத்துக் காத்திருக்கின்றேன்

நீ வரும் பாதை தெரியாதபோது, எங்கும் இருள் சூழ்ந்தபோது
விளக்கில்லாப் பாதையில் உன் வருகைக்காய் என் விழித்திருப்பு
என் நெஞ்சுக்குள்ளே காதலின் புத்துயிர்ப்பு
என் விழிகளிலோ கண்ணீர்ப்பூக்களின் மலர்வு





இரவு தூங்கும் நேரம், பாடல் மறந்து
புள்ளினமும் தூங்க
வாழ்வு முடிந்து பூவினமும் உறங்க,
ஒரு நாள் பயணத்தின் முடிபு.

அமர்ந்து களைப்பாற என் அழுக்கு உடைகளை
களைந்து மாற்றிட, உண்டு பசியாறி, தூங்கிக் களைப்பாற
பாதியில் நிற்கும் என் பயணம் தொடர
இறைவா சக்தி கொடு

என்னைச் சூழ்ந்த வறுமையையும்
என்னை நிறைக்கும் வெறுமையையும் மறைந்திட
உன்னால் என்னை நிறைத்துவிடு

இருள் சூழ்ந்த உலகில், நீயே என் நம்பிக்கை நட்சத்திரம்
தொழுது மகிழும் என் இதயத்தில் ஆயிரம் குறை
உன்னிடம் என்னைத் தந்தே உறங்க நினைக்கின்றேன்
உன் திருச்சந்நிதியில் என் சரணாகதி



என் இருண்ட சிறையிலிருந்து விடுதலை தா
உண்மையின் பாதையில் என்னை வழிநடத்து
நீயே சத்தியம், நீயே வழி- நீயே வாழ்வு

அருகிருந்தும், உன்னை நான் அறியவில்லை
அறியாமை இருளுக்குள் நான்?அந்தகாரத்தில் என் வாழ்வு
உன் இருப்பை அறியாத இருளில் என் இருப்பு
தூக்கத்தில் கழியும் என் வீண்பொழுதுகள்.
விழிப்புணர்வில்லாத வாழ்க்கை, தேம்பியழுகின்றேன்

தாயே உன் மடிமீது தலைவைத்து
தூங்க ஆசிக்கின்றேன். எனக்காய் ஒரு தாலாட்டு பாடு
என்னை வாட்டும் ரணங்கள் ஆறட்டும்

உதயம் காணாத இருளில் என் இருப்பு
என் இதயச் சுடரில் எண்ணெயில்லை
ஒளியேற்ற எந்த உறவுமில்லை, துன்பங்கள
நிறைந்த வாழ்வில் செல்லும் வழியும்
சேருமிடமும் தெரியாமல் என் தவிப்பு



இரவு வானுக்கு நிலவும் நட்சத்திரங்களும் இருக்க
என் வாழ்வு இருளில் மூழ்குமோ?
என் இதயச் சுடரில், அப்பா நம்பிக்கை ஒளியேற்று



என் ஆசைகளே எனக்குத் தளைகளாயின
அறியாமையால் என் அகம் இருளடைந்தது
என் பயணம் நின்றுபோனது
இருள் சூழ்ந்த மரணப்பள்ளத்தாக்கில் என் வாழ்வு
இறைவா நீயே என் ஒளி
என் சுமை பெரிது, சோர்வு பெரிது
நிந்தை அவமானம் என்னை நொருக்கிடும்போது
என் மாட்சியும் மகிமையும் நீயே

அகங்காரப் புதைமணலில் புதையுண்டேன்
ஒளி காணாத இருளில் என் தவிப்பு
ஆசைகளே தளைகளாயிட, என் வாழ்வோ சிறை



என்னை நான் சந்திக்க, எனக்குள்ளே என் பயணத்தை
பலமுறை ஒத்தி வைத்தேன் வேண்டுதலும் பிரார்த்தனையும்
வெற்றுச்சடங்ககளுமாய் என் ஆன்மீகம்.
ஒரு நாள் உள்ளே விழுந்தேன், உன்னைக் கண்டேன்.

ஆசைச்சிறையில் நான், ஆன்மாவை விற்று
உலகை வாங்கிட என் வியாபாரம்.
செல்வங்கள் குவிந்தது, மாளிகை வந்தது
அன்பு மறைந்தது, ஆவலாய் தேடியவை,
அநாதரவாயக் கிடந்திட
அன்பை வாங்கிட அலைந்து களைத்தேன்
என் அகவெறுமை அகங்காரத்தை அழித்திட
என்னுள் விழிப்பு

உன்னை மறந்த பக்தன் நான், என்னை மறவாத அன்பன் நீ
என் இதயத்தில் நீயில்லை, உன் இதயத்திலோ எனைத்தவிர
உனக்கோ வேறு நினைவில்லை, காதலாகிப்போனது பக்தி
கனிந்த காதலர்க்கே தெரியும் இந்த முக்தி.



உன் வரவிற்காய். உறங்காது விழித்திருந்த உள்ளம்
களைத்துப்போனது, உன்னைத் தவிர எல்லோரும் வந்தார்கள்
இருந்தவற்றை எடுத்துச் சென்றார்கள்
எடுப்பதற்கு ஏதுமில்லை என்றபோது யாரும் வரவில்லை
சூனியத்தில் நான் இருக்க, சூனியமாய் நீ வந்தாய்
என் மாட்சியும் மகிமையும் நீயே,
உன்னாலே என் மாட்சி!, உன் அருளே என் உயர்ச்சி

பொன்னும், பொருளும், புகழும் வேண்டாம் புண்ணியனே
நாளும் உன்னை தொழுதிடும் நல் உள்ளம் தருவாய்
என் விழிகாணும் காட்சியும் நீயாக
என் செவி கேளும் கானமும் உனதாக
என்னை மாற்று



ஆசையே தளை, அறியாமையே துன்பம்
பரம்பொருளே நீ தந்த சுதந்திரம் மிகப்பெரிது
என் தந்தையே-என் சிலுவையைச் சுமந்து உன் பின் செல்ல
சக்தி கொடு, உன்னை அன்பு செய்து இன்புற
அன்பு மயமான உன் இதயம் கொடு
உலக ஆசைகள் என் சிறகுகளை முறிக்காமல்
என் கால்களை பிணைக்காமல் என்னைக் காத்திடு.



வெறுமையில் கிடக்கும் என் இதயத்தை
உன் அன்பினால் நிறைத்துவிடு
விழிப்புணர்வெனும் விளக்கை என்னுள் ஏற்றிவிடு

சக்தி கொடு, வல்லமை கொடு
அகங்காரம் அழிந்த அருள்நிலை கொடு
அப்பா என்று வாஞ்சையோடு
உன்னை அழைக்கும் உள்ளம் கொடு

எல்லையில்லாப் பேரன்போடு எல்லாமுமாய்,
எல்லாவற்றிற்கும் மேலாய்-அப்பா, தந்தாய்
உன்னை நான் அன்பு செய்யவும், உன்னை அன்பு செய்யத்
தடையாயிருக்கும் அனைத்தையும் நான் இழக்கவும்
இன்முகத்தோடு துறக்கவும் மறக்கவும் வரம் கொடு
நீயே என் வாழ்வு உன்னை மறப்பதே என் சாவு.

பாலையைக் கடக்கும் பயணத்தில் கதிரும் சுட
கடலும் கொதிக்க, கற்பாறையும் உருகிட
கண்ணீரில் என் இதயம், முள்ளும் மலருமாய் ரோஜா
சேற்றில் செந்தாமரைபோல் வாழ்வு

கல்லான என் உள்ளம் கரைந்திட, உன் வார்த்தை
செழித்து வளர்ந்திட, பெய் அன்பு மழையே மழையே பெய்.
இடியும் மின்னலும் என் கல் நெஞ்சை இடித்து நொருக்கிட
என் இதயமும் உன் இல்லமாய் மாறிட
அன்பு மழை பொழிவாய் என் அப்பா






நானோ இக்கரையில்-நீயோ அக்கரையில்
நடுவே ஓடும் காதல் நதி, படகோட்டி இல்லை
நதியிலோ பெருவெள்ளம்
நீந்த துடிக்கின்றேன்-ஆனால் நீச்சல் தெரியாது
என் நேசரே நான் மூழ்கினாலும்
என்னை காக்க நீ வருவாய் நதியில் குதிக்கின்றேன்

நீயில்லாத வாழ்வு எனக்கெதற்கு? என் காதலே
என் காதலே!, ஏன் என்னைக் கைநெகிழ்ந்தாய்?
உன் பார்வையின்றி மெய்யும் வாடிட, உன் அணைப்பின்றி
உயிரும் வாடிட. ஏனிந்த சோகம் எனக்கு?
என் காதலும் கலையும் கனவுதானோ?
நீரில் இட்ட கோலம் தானோ?

உனக்காய் காத்திருந்து என் இளமையும் வாடிட
வண்ணமும் வெளிறிட ஏன் நீ வரவில்லை?
என் விழி நீர் மழை பொழிய
என் விம்மல் காற்றில் உன்னைத் தேடிக் கதறிட
ஏழை உள்ளம் உனக்காய் காத்திருக்கின்றது



என் இதயம் எங்கும் பொங்கும் பரவசம்
என் இதயத்திலோ குயிலின் தேவகானம்
என் விழிகளிலோ மயிலின் நடனம்
மேனியெங்கும் நாணக்கோலம்
இதயமோ இறகு முளைத்து எழுந்து பறந்து
இதழ்விரித்த மலராய்-கண்ணாளனே
உன் காலடி சேரத்தவிக்குதய்யா

காதலாகி நீ வந்தபோது, என் நெஞ்சில் காதலில்லை
நீயோ காத்திருந்தாய்
நானோ பொம்மைகளோடு விளையாடும்
சிறுமி, அருகே நீ இருந்தும்
உன் அருமை உணராத வெறுமை
ஆயினும் உன் இருப்பால்
ஒளிர்ந்த கணங்கள் என் நெஞ்சுக்குள்
இன்றும் வனப்பாய் இனிக்குது.

அந்தி சாயம் வேளை என் உள்ளம் உன்னைத் தேடுகின்றது
நிலவும் தென்றலும் சுட, நீள இரவும் வாட்டிட
காதலே உனக்காய் காத்திருந்து-சிந்தும்
கண்ணீரால் சிவக்கும் என் விழிகள்



என் கானத்தில் குயிலும் விம்மிக் கரைய
என் வானில் நிலவும் தேய்ந்த அலைய
என் வேதனை -இன்னுமா உனக்குப் புரியவில்லை?



நீ வருவாய் என்று இதயம் மகிழ
மையிட்ட விழிகளோடும் மதுமலர் குழலோடும்
புத்தாடை புனைந்து பூனே வாசம் வீசிட-இதயத்திலோ
எல்லையில்லாப்  பெருமகிழ்ச்சி, நெஞ்சிலே
பொங்கும் புதுப்புனலாய்க் காதல் பொங்கிட
உன் காலடி ஓசைக்காய் தவிக்கும் என் செவிகள்
துடிக்கும் என் இதயம்.

நீயோ கலாரசிகன், நானோ பாடத் தெரியாத ஊமை
இசைமீட்க தெரியாத செவிடன்
ஆயினும் நான் இசைமீட்டிப் பாடினேன்
இது காதலின் அழைப்பு
நீயோ கரைந்தோடி வந்தாய், என்னே! உன் அன்பு.

என் துயில் கலையாதீர்-என் தோழியரே
காதலுக்காய் காத்திருந்து, சோர்ந்து உறங்குகின்றேன்
என் வீணை ஊமையாய் ஓய்ந்து கிடக்க
என் காற்சலங்கைகள் முடமாகி தூங்கிக் கிடக்க
என்னை எழுப்பாதீர்



என் பிரியன் காலடி ஓசை கேட்டு என் துயில் கலையட்டும்
என் கண்ணீர் அவன் கைவிரல் பட்டுக் காயட்டும்
என் முகதரிசனம் அவராகட்டும், என்னைத் தொட்டு
தழுவிடும்போது என் இதயம் உயிர் பெறட்டும்.




என் கனவில் அவரோடு கைகோர்த்து நடக்கின்றேன்
வண்ண ஆகாயம் மேலே, வாசப்பூவனமோ கீழே
அலையும் கடலும், உலாவும் நிலவும் வாழ்துச்சொல்ல
தழுவும் தென்றல் என்னை அணைத்து செல்ல காதல் உலா

மலர்களும், மணிமாலையும் என்னவர் தந்த காதல் பரிசுகள்
பொழுதே சாயாதே, இரவே விடியாதே, என மனம் கெஞ்ச
மனதை மிஞ்சிய மகிழ்ச்சியால் மானாய்த் துள்ளும் உள்ளம்

தூக்கம் கலைய விழிப்பு, உறக்கத்திலும்
உவகை தரும் காதலின் இருப்பு

நானோ தெருப்பிச்சைக்காரன், கந்தலே என் ஆடை
இரத்தல் என் இழி பிழைப்பு நீயோ
நாளும் தங்கரதத்தில் உலாவரும் இளவரசன்
உன்னிடம் பரவசத்தோடு இரக்க காத்திருந்தேன்
நீயோ என்னிடம் என்ன தருவாய்
உன் இளவரசனக்கென்றாய்?



வாடி நான் சோர்ந்து -வழுங்கிட
என்னைத் தவிர என்னிடம் ஏதுமில்லை என்றேன்
வாருங்கள் என்றே என்னை உன் தேரிலேற்றி
உன் மாளிகையில் என்னை விருந்தாளியாக்கி
இருப்பதெல்லாம் உனக்கே
நானும் உனக்கே என்றாய், என்னே உன் அன்பு.

உனக்காய் காத்திருந்தவர் எல்லோரும்
நீ வரக் காலதாமதமாகிட உறங்கச் சென்றார்
விருந்தும் அலங்காரங்களும் களைந்து கிடக்க
நள்ளிரவு கடந்த நேரம், நிலவும் நானும் விழித்திருந்தோம்
நீ வந்து கதவை தட்டிட நான் மட்டும் விழித்திருந்து
கதவைத் திறந்திட-நாதனே உன் மேல் கொண்ட காதலால்
என் விழிப்பு. இதுவே காதல் களிப்பு

அகம் இருளில் மூழ்கிட, ஆணவமும் அலங்காரமமாய்
வெற்றுச் சடங்குகள், ஏற்றிய தீபங்கள் ஒளியிழக்க
நீயில்லாத ஆலய வழிபாட்டில் அலங்கார இருள்



நீ தந்த பரிசு என் நெஞ்சுக்குள்
நிலவும் மலரும் உனை நினைப்பூட்ட
நெருங்கிய கணங்கள் தேனாய் இனிக்க
நெஞ்சிலே ஆயிரம் பூவாசம்.

ஓ காதற் கடலே என்னை ஆட்கொள், மூழ்கடி
உன்னில் கலந்து மறையும் நதி நான், என்னுள்
பொங்கிப், பூரித்து எழும் காதல் நீ
உன்னை நோக்கி என் பயணம்
உன் விரிந்த கரங்களுக்குள் என் வாசம்.

என் விழிகாணும் காட்சியும் நீ, என் மொழி பேசும் கவிதையும் நீ
பூவிலும் வாசமடி உன் நேசம், குயிலிலும் இனிதடி உன் தேவகானம்
எங்கும் என் அன்பே நீயடி, என் நெஞ்சிலோ என்றும் நீயடி



பிரபஞ்சப் பெருங்கடலில் -பல யுகங்களுக்குப்
பின்னர் ஓர் பேரலை-குழந்தைகளோ
கிளிஞ்சல்கள் பொறுக்கி மணல் வீடு கட்டி விளையாடிட
பெற்றோரோர் கதை பேசி பொழுதை கழித்திட
விழிப்புணர்வு இல்லாத இருள்
எல்லோரும் தூக்க மயக்கத்தில்.

தூங்கிடும் குழந்தையின் பூமுகத்தில் புன்னகை
உடலிலோ சொர்க்கத்தின் தெய்வீக வாசம்
செவிகளிலோ தேவதைகளின் தாலாட்டு
தாய் முத்தமிட குழந்தை சிரிக்கின்றது
தெய்வங்கள் கொஞ்சி மகிழ.
குழந்தைபோல் ஆகுங்கள் மானுடரே

எங்கும் எல்லாம் நீயானபோது அந்நியர் யாருமில்லை
நன்மை தீமையில்லை, இருமை கடந்த இன்ப நிலை
பூக்களும் முட்களும் இறைவடிவங்களே
இரவும் பகலும் எம்மைத் தாலாட்டும் பாடல்களே



உன்னையே நீ எனக்குத் தர, அடிமையின் வடிவெடுத்தாய்
என் அகங்காரமழித்து என்னை ஆட்கொள்ளத்
தொழுவத்தில் உன் பிறப்பு, நாடோடி போதகனாய்
உன் வாழ்வு சிலுவையில் உன் மரணம்
இரவல் கல்லறையில் உன் அடக்கம்.
என்னே உன் அன்பு

நலிந்த உள்ளம் நம்பிக்கை கொள்ள,
வடியும் கண்ணீர், வற்றாத புன்னகையாய்
மாற என்னைத் தேடிவந்த தெய்மகன் நீ

ஐயனே உன்னை அன்ப செய்ய உலகிலே கோடி மனிதர்
அநாதை என்னை அன்பு செய்ய உன்னைத் தவிர
எனக்கு யாருமில்லை நீ ஒருவன் மட்டும்தான்
என் சொந்தம்- தந்தையே என்னை மறவாதே

என் வாயிலில் இரப்போர் ஒருவர்
இருந்ததை பகிர்ந்தபின், இதயத்தில் ஆனந்தம்
எல்லாம் நீயே என்ற பேரின்பம்



என் வீட்டில் நீரில்லை கால் நடையாய் கங்கையில்
நீர் எடுத்து திரும்புகையில், வாடி வழி நடந்த வழிப்போக்கர்
அருந்த நீர் கேட்டார், நெடுந்தொலைவு நடந்து சுமந்த நீரை
நெஞ்சுமகிழப் பகிர்ந்து வாடியவர் நீள் விடாய் தணித்தேன்.

தன் பெயர் சொன்னார், ஊர் சொன்னார், பரவசமாகி
வாழ்வில் தன்னோடு உலாவிடக் காதலாகி
என்னை அழைத்த என் காதலர் பெருவணிகர்

எண்ணும் நீயே-பெறுமதி, ஏதுமில்லாப் பூஜ்யமும் நீயே
படைப்பாய் நீ, படைப்புமாய் நீ
படைப்பதை தாங்கிடும், பரமசூனியமாய் நீ
அதிசயத்திலும் அதிசயம் நீ

என் பூவனத்தில் -ஆயிரம் வாசமலர்கள்
என் பொற்றாமரை குளத்தில் பல வண்ணப் பங்கயங்கள்
ஆயினும் சூட மலரின்றி மாலை தொடுக்கப் பூவின்றி
வாடுகின்றேன்- பூவை என்னை சூடிக்கொடுக்கும்
ஆண்டாளாய்
மதுசூதனே என்னை மாற்று.



**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra- 24-03-2023*